


# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

SHIVAJI
TAMIL WEEKLY
33rd year
of Publication
25—2—1968

# தொழில்துறை முன்னேற்றத்திற்கோர் அரிய வாய்ப்பு

சென்னை சர்வதேச வணிகத் தொழிற் பொருட்காட்சியிலுள்ள சோவியத் அரங்கில் நடைபெற்ற ஒரு வட்ட மேஜை மாநாட்டில் சோவியத் எந்திரங்களின் தன்மைகள் விவாதிக்கப்பட்டன; திறமைகள் போற்றப்பட்டன; குறைபாடுகள் கூறப்பட்டன; கேள்விகள் பல கேட்கப்பட்டன; அவற்றிற்குப் பதில்களும் தரப்பட்டன.

சோவியத் உதவியின் மெய்யான பலன்களும், சிறப்பும், அவ்வுதவியை எவ்வாறு நாம் உபயோகித்துக் கொள்ளலாம் என்ற விஷயமும் தீவிரமாக அந்த மாநாட்டில் விவாதிக்கப்பட்டன. பல்வேறு துறைகளிலும் அளிக்கப்படும் சோவியத் உதவி, இந்தியந் தொழில் முன்னேற்றத்திற்கோர் அரிய வாய்ப்பினையும் விவரித்தார். முதலில் கூறப்பட்ட நிறுவனம் பெருவாரியாக மின்னணுக் கருவிகளையும், எந்திரப் பொருள்களையும், உணவு, கண்ணுடி மருந்துப் பொருள்கள், கூழ்ப் பொருள்கள், தொழில்களுக்குத் தேவையான எந்திர சாதனங்களையும் ஏற்றுமதி செய்கிறது.

இரண்டாவது நிறுவனம் எந்திரக் கருவிகள், உலோகத் தொழில் எந்திரங்கள், அளவைக் கருவிகள் ஆகியவற்றை ஏற்றுமதி செய்கிறது.

இந்தியச் சந்தைகளில் சோவியத் எந்திரப் பொருள்களுக்குள்ள தேவைகளைப் பற்றிப் பேசிய 'பவர் அன்ட் டுல் அப்ளையன்சஸ் கம்பெனி'யைச் சேர்ந்த திரு. பானர்ஜி, இதுகாறும் இந்தியாவெங்கணும் 2000க்கும் அதிகமான சோவியத் எந்திரங்கள் வாங்கப்பட்டுள்ளன என்றும், அவை வெகு திறமையுடன் இயங்கி வருகின்றன என்றும், அந்த எந்திரங்களை இயக்குவதற்கு இந்திய தொழில் நுட்ப வியலாளர்கள் கார்க்கிக்கும், லெனின் கிராடுக்கும் அனுப்பப்பட்டுள்ளனர் என்றும் கூறினார்.

டில்லியிலுள்ள சோவியத் வர்த்தக நிறுவனத்தைச் சேர்ந்த திரு. சலிவானேவ், இந்தியாவிற்கு அச்சு எந்திரங்களை ஏற்றுமதி செய்வது பற்றிப் பேசினார். கான்பூரிலுள்ள 'டெய்லி ஜகாரன்' பத்திரிகைக்கு 'ரோடரி அச்சு' எந்திரம் சப்ளை செய்யப்பட்டுள்ளது பற்றிக் கூறினார்.

அச்சுத் தொழில், நெசவுத் தொழில், உணவுத் தொழில் ஆகியவற்றிற்கான எந்திரங்களையும் சோவியத் யூனியன் 'சப்ளை' செய்ய முடியும் எனக் கூறினார் அவர்.

மனுபாய் கம்பெனியைச் சேர்ந்த திரு. பழனி, சோவியத் எந்திரங்களையும், கருவிகளையும் குறித்துச் சிறப்பாகப் பேசினார்.

'வீல் அண்டு ரிம் கம்பெனி'யின் பொது நிர்வாகியான திரு. ஏ. கே. போஸ், சைக்கிள் டயர்கள் தயாரிப்பதற்கான எந்திரக் கருவிகளை சோவியத் யூனியன் தந்துதவ முடியுமா என்று கேட்டார். 'முடியும்' என்ற பதில் அவருக்கு அளிக்கப்பட்டது.

சில மேலை நாடுகள் காலாவதியான, பழைய 'மாடல்' எந்திரங்களைப் புதிதாக்கி விற்றுவிடும் தீய பழக்கத்தை மேற்கொண்டிருப்பது குறித்து வருத்தம் தெரிவித்துப் பேசினார். திரு. போஸ். சோவியத் யூனியனைப் பொறுத்த வரை, அது போன்று நடைபெறாது என்ற உறுதிமொழியை அளித்தார் தெனிசோவ். மிக நவீன உத்திகளைக் கொண்ட எந்திரக் கருவிகளையே சோவியத் யூனியன் அளிக்கிறது என்றார் தெனிசோவ். ராஞ்சியிலுள்ள கனஎந்திரத்தொழிற்கூட உதாரணத்தை எடுத்துக் கூறிய அவர், அங்குள்ள எந்திரங்கள் மிக நவீனமானவை என்றும், அவை போன்று அமெரிக்காவிலோ, மேற்கு ஜெர்மனியிலோ கூடக் கிடையாது என்றும் அவர் தெரிவித்தார்.

'மனேடைப்' எந்திரங்களின் உற்பத்தி வெகுவாக முன்னேறி வருகிறது என்றும், பல இந்திய மொழிகளுக்கான எந்திரங்கள் தயாரிக்கப்பட்டு வருவதாகவும் அவர் கூறினார்; தமிழ் மனேடைப் எந்திரங்களும் விரைவில் சப்ளை செய்யப்படும் என்றார் சலிவானேவ்.

சிறிய அறைவை எந்திரங்களுக்கான தேவையை திரு. பாலிகா உரைத்த போது, குறிப்பிட்ட கருவிக்கான புனைத்திட்டத்தை அளித்தால், அதுகுறித்துப் பரிசீலிக்கப்படும் என்று அவருக்குக் கூறப்பட்டது.

சென்னைப் பொறியியல் கல்லூரியைச்சேர்ந்த பேராசிரியர் ஒருவர் பொறியியல் துறைக்கான அளவை எந்திரக் கருவிகள் குறித்துக் கேட்டார்.

சோவியத் எந்திரப் பொருள்களுடன் சேர்ந்து, அவற்றிற்கான உதிரி உறுப்புக்களும், பாகங்களும், அவற்றை 'ரிப்பேர்' செய்வதற்கான வசதிகளும் தற்போது அளிக்கப்படுகின்றன என்ற விவரத்தை திரு. பானர்ஜி கூறினார். 'டிஸ்கோ', 'ஹெச் எம் டி', 'டி. ஐ. சைக்கிள்' ஆகிய பல

[ 5ம் பக்கம் பார்க்க ]

# நாடும் விவசாயமும் செழிக்க வழி உண்டு

‘பாசன வசதியுள்ள விவசாயி ஒருவர் ஹெக்டேர் ஒன்றுக்குப் பத்து டன் உணவு உற்பத்தி செய்ய முடியவில்லையென்றால் அவர் விவசாயம் செய்வதைவிட்டு விடவேண்டும்’ என்கிறார் கோயம்புத்தூர் மாவட்டத்தைச் சேர்ந்த விவசாயி ஒருவர். இவர் முன்னேறி வரும் விவசாயிகளுள் ஒருவர்.

பஞ்சாபைச் சேர்ந்த அனேக விவசாயிகள் கோயம்புத்தூர் விவசாயியின் இக்கருத்தை ஆமோதிக்கின்றனர்.

‘ஒரு ஹெக்டாருக்கு நூறு குவிண்டல் உணவு உற்பத்தி செய்வது சாத்தியமே’ என்கின்றனர் நிபுணர்கள் அனேகர்.

மேற் குறிப்பிட்ட விவசாயிகள், நிபுணர்கள் இவர்களின் அபிப்பிராயங்கள் சரியானதென்று சில விவசாயிகளின் மகசூல் நிரூபிக்கின்றன. இவ் விவசாயிகளுள் சிலர் ஹெக்டேர் ஒன்றுக்கு நூறு குவிண்டல் மகசூல் கண்டிருக்கின்றனர் மற்றவர்கள் இக் குறிக்கோளை எட்டிக் கொண்டிருக்கின்றனர். லூதியானா மாவட்டத்தில் மச்சியாரா தொகுதியைச் சேர்ந்த அல்லோனாதோலாவிலுள்ள பகவத்சிங்கை எடுத்துக் கொள்ளுங்கள்: இவர் ஆண்டொன்றுக்கு ஹெக்டேருக்குச் சராசரி ரபி அறுவடையில் 40 குவிண்டால் கோதுமையும் கரீப் அறுவடையில் 60 குவிண்டால் மக்காச் சோளமும் மகசூல் கண்டிருக்கிறார். பகவத் சிங் இக் குறிக்கோளை எட்டிவிட்டாரென்றால், தில்லியில் ஒரு விவசாயி, குதுப்மினாருக்கருகிலிருக்கும் தன்னுடைய சிறு வயலில் கரீபில் இரு பிறவி மக்காச் சோளமும் ரபியில் கோதுமையும் பயிரிட்டார். முதல் முயற்சியிலேயே இவர் ஒரு ஹெக்டேருக்கு 40 குவிண்டால் இருபிறவி மக்காச் சோளமும், 30 குவிண்டால் கோதுமையும் மகசூல் கண்டு ஹெக்டேர் ஒன்றுக்கு ரூ. 4,000 வருமானம் பெற்றார். கடந்த இரண்டு ஆண்டுகளில் என். சுப்பராவ், கே. புல்லம் ராஜு போன்ற அனேக விவசாயிகள் ஆந்திரப் பிரதேசத்தைச் சேர்ந்த மேற்குக் கோதாவரி மாவட்டத்தில் கரீபில் தைசூங் நேடிவ்-1 நெல் விதைத்து ஹெக்டேர் ஒன்றுக்குச் சராசரி 70 குவிண்டால் நெல் மகசூல் கண்டிருக்கிறார்கள். லூதியானாவைச் சேர்ந்த ஹர்ஜீத்ஸிங் ஸானேவால் ஒரு வருடத்தில் ஹெக்டேர் ஒன்றுக்கு 67 குவிண்டால் இருபிறவி மக்காச் சோளமும் 42 குவிண்டால் கோதுமையுமாக மொத்தம் 109 குவிண்டால் தானியம் மகசூல் செய்தார். மைசூரிலுள்ள மாண்டியா மாவட்டத்தைச்சேர்த்தமலவாத்திலிருக்கும் நாகராஜ மூர்த்தியை எடுத்துக்கொள்ளுங்களேன். இவர் 1964-65ல் கம்பு விதைத்து ஹெக்டேர் ஒன்றுக்கு 72 குவிண்டால் மகசூல் கண்டிருக்கிறார். கம்பு, சாதாரணமாக ஹெக்டேர் ஒன்றுக்குச் சராசரி 20 இலிருந்து 25 குவிண்டாலுக்கு மேல் பயன் தராது.

மைசூரைச் சேர்ந்த மற்றொரு விவசாயி ஹெக்டேர் ஒன்றுக்கு 125 குவிண்டால் இரு பிறவி மக்கச் சோளம் விளைவித்தார். 1964 இல் இதே ராஜ்யத்தைச்சேர்ந்த என். அர்ஜுனப்பா 92 குவிண்டால் மகசூல் எடுத்தார். மைசூரில் துங்கபத்ரா திட்டப் பிரிவிலிருக்கும் ஸ்ரீ. கே. வெங்கய்ய சௌதரி, 1965-66இல் தைசூங் நேடிவ்-1 விதைத்து, தன்னுடைய முதல் முயற்சியிலேயே ஹெக்டேர் ஒன்றுக்கு 106 குவின்டால் மகசூல் எடுத்தார். வடக்கில் அலிகட் மாவட்டத்திலுள்ள பிஸாவா கிராமத்தைச் சேர்ந்த கன்வர் சகோதரர்கள் ஏகர் ஒன்றுக்கு 125 மாண்டு கோதுமை – ஏறக்குறைய ஒரு ஹெக்டேருக்கு 115 குவிண்டால் விளைவித்திருக்கின்றனர். இவர்கள் வயல்களுக்குப் பாசனம், வாய்க்கால், கிணறு அல்லது குழாய்க் கிணறு மூலம் செய்யப்பட்டிருக்கிறது.

அதிக மகசூல் தரும் தானிய ரகங்களை விளைப்பது அதிக மகசூல் பெற முதல் வழி. கடந்த சில ஆண்டுகளில் நம்முடைய விஞ்ஞானிகள் அந்தந்தப் பிராந்தியங்களில் விளைவிக்கப் பொருத்தமான, அதிக மகசூல் தரும் இருபிறவி மக்காச் சோளம், சி. எஸ். எச்.-1, சி. எஸ். எச்-2 ஆகிய இரண்டு ரக இரு பிறவிச் சோளம், எச். பி-1 ரக இரு பிறவிக் கம்பு, தைசூங் நேடிவ்-1, தைனன்-3, தைசூங்-65, ஏ. டி. டி. 27, மற்றும் புதிய ரகமான ஐ. ஆர்-8 ஆகிய நெல் ரகங்கள், ஸொனோரா-64, வெர்மாரோ, எஸ். 227, கல்யாண்-227, எஸ்-308 ஆகிய குள்ள ரகக் கோதுமைகள் ஆகிய அதிக மகசூல் தரும் அனேக தானிய ரகங்கள் கண்டு பிடித்திருக்கின்றனர். நிலக் கடலையில்கூட, ஆஸ்ரியம்விடுண்டே என்ற அதிக மகசூல் தரும் ரகம் ஒன்றிருக்கிறது. இந்நிலக் கடலை, பாசன வசதியிருந்தால் 100 சத விகிதம் அதிக மகசூல் தருகிறது.

மேற் சொன்ன ரகங்கள் குறுகிய காலத்தில், அதிக மகசூல் தருவதுடன் எந்தப் பருவத்திலும் சாகுபடி செய்யக் கூடியவையாகையால், விவசாயிகள் ஒரே வயலில் வருடமொன்றுக்குச் சுலபமாக இரண்டு அல்லது மூன்று போகங்கள் விளைவிக்கலாம்.

ஒரே ஆண்டில் இரண்டல்லது மூன்று தானியங்கள் விளைவிப்பது உற்பத்தியைப் பெருக்குவதற்கான இரண்டாவது வழி. இவ்வழியிலும் நம் விவசாயிகளில் சிலர் தங்களுடைய திறமையை வெளிப்படுத்தியிருக்கின்றனர்.

அனேக விவசாயிகள் கரீப் பயிராக இருபிறவி மக்காச் சோளம், இரு பிறவிக் கம்பு, நெல் அல்லது நீவனத்திற்கான தழைகள் விளைவித்துவிட்டு அதே நிலத்தில் ரபி பயிராகக் கோதுமை விளைவித்து

நல்ல பலனடைந்திருக்கின்றனர்.

சில விவசாயிகள் கரீப் பிற்பகுதியில் உருளைக் கிழங்கு விளைவித்து விட்டுப் பின்னர் கோதுமை விளைவித்திருக்கிறார்கள். நவம்பர் மாதக் கடைசியிலோ, டிசம்பர் முதலிலோ பயிர் செய்தால்கூட, நல்ல பலன் தரும் ஸொனோரா-64 போன்ற கோதுமைகளினால் தற்சமயம் இம்மாதிரி விவசாயம் சாத்தியமாகிறது.

உத்தரப் பிரதேசத்தில் சுமார் 4 லக்ஷம் ஹெக்டேர் நிலம் நவம்பரில் நெல் அறுவடைக்குப் பின்னர், உள்ளூர்க் கோதுமை ரகம் விளைவிக்க முடியாததால் தரிசாகப் போடப்பட்டு வந்தது. தற்சமயம் வந்துள்ள புதுரகக் கோதுமைகள் இப்பிரச்சினையைத் தீர்த்துவிட்டன. மேலும் புதிதாக வந்துள்ள கே-24 ரகப் பார்லி டிசம்பரில் விதைத்தால்கூடத் தட்டாமல் பலன் தருகிறது. ஆகையால் உத்தரப் பிரதேசத்தில் தாளடிப் பயிராக நெல் சாகுபடி செய்யும் விவசாயிகள் இரண்டாவது உணவுப் பயிராக பார்லி விளைக்கலாம்.

ஆந்திரப் பிரதேசத்தில், இரண்டாவது போகம் நெல் விளைக்கப் போதுமான பாசன வசதி இல்லாத பாகங்களில் பருத்தி விளைப்பது பழக்கமாகி வருகிறது. ஆனால், இந் நிலங்களில், ஜனவரி-பிப்ரவரி, மற்றும் ஏப்ரல்-மே மாதங்களில் இருபிறவிச் சோளமான ஸி. எஸ். எச்-1 விளைக்கலாம். ஐதராபாதுக்கருகிலுள்ள ராஜேந்திர நகரத்தில், இந் நிலங்களில் ஸி. எஸ். எச்-1 விளைக்கலாம். ஐதராபாதுக்கருகிலுள்ள ரஜேந்திர நகரத்தில், இந் நிலங்களில் ஸி. எஸ். எச்-1 பயிர் செய்து பார்த்ததில் ஹெக்டேர் ஒன்றுக்கு 7.000 கிலோ வரையில் பலன் கொடுத்திருக்கிறது. தமிழ்நாடு, ஆந்திரப் பிரதேசம் இவைகளைச் சேர்ந்த சில விவசாயிகள் இரு பிறவிச் சோளத்தை மறுதாம்புப்பயிராகக்கூட விளைத்திருக்கிறார்கள். இம்முறைப் பயிரும், முதற் பயிரளவு- சில சமயங்களில் அதிக மகசூல் கூடக் கொடுத்திருக்கிறது.

அதிக மகசூல் தரும் தானிய வகைகள் விவசாயிகளின் செல்வத்தைப் பெருக்குகின்றன.

ஆந்திரப் பிரதேசத்தைச் சேர்ந்த கோதாவரி, கிருஷ்ணா, கர்நூல், மஹபூப் நகர் மாவட்டங்களிலும், மைசூர் ராஜ்யத்தைச் சேர்ந்த ரெய்சூர், பெல்லாரி மாவட்டங்களிலும் முக்கியப் பயிரான நெற் சாகுபடிக்குப் பின்னர் லாபகரமாக நிலக்கடலை விளைக்கலாம். பீஹாரில் கரீப் பயிர் அல்லது அமன் நெல்லின் தாமதித்த அறுவடையினாலோ அல்லது தண்ணீர்த் தேக்கத்தினாலோ ரபிப் பருவத்தில் நிலம் தரிசாகப் போடப்பட்டு வருகிறது; அல்லது ஆளி விதை முதலியவை பயிரிடப் படுகிறது. பரிசோதனை செய்து பார்த்ததில் இந் நிலங்களில் ஸொனோரா-64 ரகக்கோதுமை விளைத்து நல்ல மகசூலும் பெறலாம் என்று கண்டு பிடிக்கப்பட்டிக்கிறது.

விவசாயத்தில் தைசூங் நேடிவ்-1 வந்த பிறகு, ஒன்றுக்கும் மேற்பட்ட போகங்கள் விளைப்பது மேலும் சாத்தியமாகி விட்டிருக்கிறது. உதாரணமாக, பிலிப்பைன்ஸிலுள்ள அந்தர் தேசீய அரிசிப்பரிசோதனைக்கழகத்தில் முதல் போகமாக தைசூங்நேடிவ்-1 விளைவித்து 74 குவின்டால், இந்த ரகத்தையே இரண்டாவதுபோகமும் விளைவித்து 67 குவின்டால், மூன்றுவது போகமாக சைனன்-242 விளைவித்து 61 குவின்டால், ஆக மூன்று போகம் விளைவித்து மொத்தம் ஹெக்டேர் ஒன்றுக்கு 202 குவில்டால் மகசூல் கண்டிருக்கிறார்கள்.

பிலிப்பைன்ஸில் மட்டுமல்லாமல் இந்தியாவிலும் பல விவசாயிகள் லாபகரமாக வருடத்தில் முப்போகம் விளைவித்திருக்கின்றனர். மேற்குக் கோதாவரி மாவட்டத்திலுள்ள ராயலம் கிராமத்தைச் சேர்ந்த நரஸிம்ஹ ராஜு இதற்கு எடுத்துக் காட்டு. இவர் ஆண்டு முழுவதும் செற்சாகுபடி செய்து,

[ 8-ம்பக்கம் பார்க்க ]





| | | |
|---|---|---|
| மலர்: 33 | ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தொறும் | 1968 |
| இதழ்: 14 | தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே | பிப்ரவரி: 25 |


# மொழி ஒற்றுமை

வெள்ளையர் ஆட்சி வருவதற்கு முன்பு பாரத நாடு ஒரு நாடாக இல்லாமல் ஒரு கண்டமாகவே கருதப்பட்டு வந்தது. அதாவது பல நாடுகள்கொண்ட பெரும் பரப்பாகவே பாரதம் இருந்தது. அந்த நாடுகள்தான் இப்போது பாரதநாட்டின் பல மாநிலங்களாக இருக்கின்றன. பற்பல மொழிகள் பேசும் மக்கள் நிறைந்த ஒரு பெரிய நிலப்பரப்பை ஒரு ஆட்சிமொழியால் இணைத்த திறமை வெள்ளையருக்கே இருந்தது. ஆங்கிலம் தான் அனைத்திந்திய வடிவத்தை உண்டாக்கியது.

இப்பொழுது இந்தியின் பேரால் பழையபடி நாடு சிதறிப் போகின்ற நிலைக்கு வந்துகொண்டிருக்கிறது. அன்னிய ஆட்சியை எதிர்த்தது போலவே இந்தி ஆதிக்கத்தையும் எதிர்க்கவேண்டும் என்ற உணர்ச்சி ஏனைய மொழிபேசும் மக்களுக்கு உண்டாகியிருக்கிறது.

இந்தி பேசாத மாநில மக்களுக்கு இந்தியால் எவ்வித இடையூறும் வராது என்ற வாக்குறுதியைக் கொடுக்கப்போய், இந்தியை எவ்விதத்தில் பரப்புவது என்ற நடவடிக்கையாகவே ஒவ்வொருதடவையும் காரியம் செய்திருக்கிறார்கள்.

வடநாட்டில் மாணவர்கள் வன்முறைச் செயல்கள் செய்ததையொட்டி மத்திய அரசாங்கம் இந்தி ஆதிக்கத்திற்கு உதவுபடியாக நடந்துகொண்டது. தென்னாட்டு மாணவர் உலகம் இதைப் பார்த்து அதிர்ச்சியடைந்தது. வன்முறையாலன்றி உரிமைகளைக் காப்பாற்றிக்கொள்ள இயலாது என்ற முடிவுக்கு தென்னாட்டு மாணவர் உலகம் வந்தது. அதன் விளைவுதான் இன்றைய நிகழ்ச்சிகள். சிங்கமும் எருதும் என்ற கதையை யாவரும் படித்திருப்பார்கள். இவ்வளவு பரந்த பூமண்டலத்தை அன்னியர் படையெடுத்து வந்து ஆண்டகாலம் உண்டு. நம்மைவிட அளவிலும் வலிவிலும் சிறிய நாடுகளுக்கு நாம் அடிமைப்பட்டதெல்லாம் நமக்குள் ஒற்றுமையில்லாது சிதறிப்போனதால்தான்.

பாரதி கூறியது போல, ஆயிரம் ஆண்டு ஓய்ந்து கிடந்த பின்னர் வாராது போல வந்த மாமணியை-சுதந்திரத்தை தோற்கும் அளவுக்கு நமது ஒற்றுமை கெட்டு போய்க் கொண்டிருக்கிறது. இதற்கு இந்தி மொழி ஒருகாரணமாக இருக்கப் போகிறதா?

மறுபடியும் தலைவர்கள் கூடிப் பேசவேண்டும் என்ற கருத்தை பிரதமர் இந்திரா காந்தி வெளியிட்டிருக்கிறார். சுதந்திரம் வருவதற்கு முன்னர் மொழி நிலைமை எப்படி இருந்ததோ அந்த இடத்திற்குத் திரும்பிப்போய் வலிவுடன் காலூன்றிக் கொள்வது ஒன்றே சிறப்பு என்பதை தலைவர்கள் உணரவேண்டும்.

ஒன்பட்டால் உண்டு வாழ்வு-நம்மில்
ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வு.

## ரோட்டரி சங்கத்தின் 63-வது ஆண்டு விழா

இச் சங்கத்தின் 63-வது ஆண்டுவிழா திருச்சி ஆஸ்பி ஹோட்டலில் 26-2-68-ந் தேதி திங்கட்கிழமை மாலை 6 மணிக்கு நடைபெறவிருக்கிறது.

இச் சங்கம் அமெரிக்காவில் உள்ள சிகாகோ நகரில் 1905-ம் வருடம் பிப்ரவரி மாதம் 23-ம் தேதி அன்று முதல் ரோட்டரி சங்கம் நிறுவப்பட்டது. ரோட்டரியின் ஐக்கியம், சேவை ஆகிய இலட்சியங்கள் உலகெங்கிலும் ஆறு கண்டங்களில் பரவியுள்ளன. தொழில் துறை நிர்வாகிகள் பல்வேறு மதங்களை அரசியல் கொள்கைகளை பின்பற்றுவோராய் இருப்பினும் ரோட்டரியின் இலட்சியங்களை ஏற்றுள்ளனர்.

இச்சங்கத்தின் ஆண்டு விழாவின் பொழுது திருச்சி நகரில் உள்ள பெரிய மருத்துவமனைகளில் திறம்பட சேவை புரிந்த நர்சுகளுக்கும், நகரத்தை சுத்தப்படுத்தும் நகராட்சி தொழிலாளிகளுக்கும் பரிசுகள் வழங்கப்பட இருக்கின்றன.

திருச்சி ஜில்லா கலெக்டர் உயர்திரு. என். ஹரிபாஸ்கர் ஐ. ஏ. எஸ். அவர்கள் பிரதம விருந்தினராக கலந்துகொண்டு பரிசுகள் வழங்க இருக்கின்றார்கள். ரோட்டரி சங்கத்தின் 63-வது ஆண்டு விழாவின்பொழுதுகலெக்டர் திரு ஹரிபாஸ்கர் ஐ.ஏ.எஸ். ரோட்டரி சங்கத்தின் கெளரவ உறுப்பினராகின்றார்.

1968-ம் வருடம் ஜனவரி மாதம் 1ம் தேதி கணக்கின்படி அகிலஉலகம் முழுவதும் இன்று 13058 ரோட்டரி சங்கங்களும் 624000 சங்க உறுப்பினர்களும் 137 நாடுகளில் இருக்கின்றார்கள்.

ஆண்டுவிழாவிற்கான ஏற்பாடுகளை தலைவர் திரு எஸ். ரவீந்திரன் அவர்களும் செயலாளர் எம். எஸ் இராமமூர்த்தியும் தீவிரமாக ஏற்பாடு செய்து வருகின்றனர்.

## தங்க மாத்திரை

'குடும்பக் கட்டுப்பாடு' திட்டம், இன்று உலகமெங்கும் அடிபடுகிறது. கருத்தடை மாத்திரைகள் குறித்து பெண்கள் என்ன கருதுகிறார்கள் என்று மேற்கு ஜெர்மனியில் சமீபத்தில் நடத்தப்பட்ட ஆய்வினை அடிப்படையாகக் கொண்டு 'புரட்சிகரமான திரைப்படம்' ஒன்றை ஜெர்மெனியின் இளம் திரைப்பட டைரக்டரான மான்பிரட் அடால்ப் தயாரித்து இருக்கிறார். படத்தின் பெயர் 'தங்க மாத்திரை' என்பதாகும். 'வேண்டாத குழந்தை' பிறப்பதைத் தடுக்க, கருத்தடை மாத்திரையை பயன்படுத்திய உயர்நிலைப்பள்ளி மாணவி, கடவுள்பக்தி மிக்க குடும்பப் பெண், எதற்கும் துணிந்த மாணவி ஆகியமூன்றுபெண்களின் உணர்ச்சிப் போராட்களை இப்படம்சித்தரிக்கிறது. கற்பழிக்கப்பட்ட பெண், கருத்தரிக்கிறாள். இதனால் அவள் இரவிலும் பகலிலும் அஞ்சி நடுங்குகிறாள். இவர்களின் முடிவு என்ன என்பதை ரசிகர்கள், படத்தில் தான் தெரிந்து கொள்ள வேண்டும்.

## லால்பகதூர் - சாஸ்திரியின் சிலை அன்பளிப்பு

தாஷ்கெண்டில் நடைபெற்ற மாபெரும் கூட்டத்தில் இந்தியத் தூதுக்குழுவின் தலைவரான திரு. யஷ்பால் ஜெயின், தாஷ்கெண்டு நகர மேயர் திரு. ஹஸ்நுத்தீன் அசமோவிடம் லால்பகதூர் சாஸ்திரியின் மார்பளவு வெங்கலச் சிலையை அன்பளிப்பாக வழங்கினார்.

தாஸ்கெண்டு மேயர் இதற்கு நன்றி தெரிவித்துப் பேசுகையில், 'உஸ்பெக் மக்களின் உள்ளங்களில் திரு. லால்பகதூர் சாஸ்திரி நினைவு என்றென்றும் நிலைத்திருக்கும்' என்றார்.

## இதயத்துடிப்புக்கு 'எலக்ட்ரானிக்' சிகிச்சை

இருதயக் கோளாறு உள்ளவர்களுக்கு 'எலக்ட்ரானிக்' சிகிச்சைமூலம் வியாதியைக் குணப்படுத்தும் முறை பிரிட்டனில் பிரபலமடைந்து வருகிறது.

இதயத்துடிப்பு தடைப்பட்டாலும் அல்லது மெதுவாகஇயங்கினாலும், 'எலக்ட்ரானிக்' சிகிச்சையின்மூலம், நாடித்துடிப்பை சீர்படுத்தலாம். இந்த முறையைப்பின்பற்றி பிரிட்டனில் பல ஆஸ்பத்திரிகளில் நோயாளிகளுக்கு சிகிச்சை அளிக்கப்படுகிறது. இந்தத்துறையில் நிபுணரான டாக்டர் சிட்டன்ஸ் ஒரு பேட்டியில் 'இருதயக் கோளாறு முதியோர்களுக்குத்தான் வருவதுண்டு. ஆனால் இப்போதெல்லாம் இளைஞர்களுக்கும் இந்தக் குறை ஏற்படுகிறது. சமீபத்தில் 5 வயது சிறுவன் ஏற்படுத்தியுள்ளது என்ற உண்மையை அனைவரும் ஒப்புக்கொண்டனர்.

விவாதங்களைத் துவக்கி வைத்துப் பேசிய சோவியத் அரங்கின் வணிக இயக்குநரான டாக்டர் தெனிசோவ், சோவியத் அயல் வர்த்தக நிறுவனங்களான 'டெக்மாஷ் எக்ஸ்போர்ட்' ஆகியவற்றின் பங்கையும், அவற்றின் நடவடிக்கைகளை ஒருவனுக்கு சிகிச்சை செய்தேன். 'எலக்ட்ரானிக்' முறை சிகிச்சைமூலம் இதயம் எவ்வளவு பலஹீனமாயிருப்பினும் அதை சீர்படுத்த முடியும்' என்றார்.

இந்த 'எலக்ட்ரானிக்' கருவி தற்போது வர்த்தரீதியிலும் பிரபலமடைந்து வருகிறது. வெளிநாடுகளிலும் இதற்கு பெருத்த அளவில் வரவேற்பு உள்ளது. தயாரிப்பாளர்கள் தங்கள் உற்பத்தியில் பாதிக்குமேல் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்கிறார்கள்.

---

## வானொலி, டெலிவிஷன் நுணுக்கப் பயிற்சி

மூன்னேறும் நாடுகளைச் சேர்ந்த இளைஞர்களுக்கு வானொலி, டெலிவிஷன் தொழில் நுணுக்கங்களில் பயிற்சி அளிப்பதற்காக, 'நெதர்லாந்து வானொலி உலக ஒலிபரப்பு சர்வீஸ்' ஒரு பயிற்சி நிலையம் ஒன்று தொடங்க உத்தேசித்திருக்கிறது. இதற்கு 3,26,400 டாலர் செலவாகும். இதில் ஒரு பகுதியை பிலிப்ஸ் கம்பெனி ஏற்றுக்கொள்கிறது. ஒவ்வொரு முறையும் 22 இளைஞர்களுக்கு வானொலி டெலிவிஷன் தொழில் நுணுக்கங்களில் நாலரை மாதம் பயிற்சி அளிக்கப்படும். இரு முறைகளில் பயிற்சி தரப்படும்.

---

## வெப்பக்காற்றாடி!

வெயில் கடுமையாக இருந்தால் மின்சாரக் காற்றாடியைப் பயன்படுத்துகிறோம். இது போல டச்சு நாட்டில் குளிர்காலத்தில் தொழிற்சாலைகள்; கிடங்குகள் போன்ற இடங்களில் வெப்பமான காற்றை வீசுவதற்கு ஒரு புதுமையான காற்றாடியை 'நிவோலா' என்னும் டச்சு கம்பெனி தயாரித்திருக்கிறது. 'சீலிங் பேஃன்' 'ஏர் ஹீட்டர்' ஆகிய இரு இயந்திர சாதனங்களும் ஒன்றாகச் சேர்ந்து உருவாக்கப்பட்டிருக்கிறது. குளிர் காலத்தில் இந்த அதிசயமான வெப்பக் காற்றாடி, மிகவும் பயனுள்ளதாக இருக்கிறது.

---

[ 1-ம் பக்கத் தொடர்ச்சி ]

நிறுவனங்கள் சோவியத் எந்திரங்களை வாங்கியிருப்பதாகவும் அவை பூரண திருப்தியை அளித்துள்ளதாகவும் அவர் தெரிவித்தார். எத்தகைய உதிரி பாகத்தையும் சப்ளை செய்வதற்கான முறை வகுக்கப்பட்டிருப்பதாகவும் அவர் தெரிவித்தார்.

# கவிஞர்கள் அரசியலில் ஈடுபடலாமா?

'கவிஞர்கள் அரசியலில் ஈடுபடலாமா?' என்ற கேள்விக்கு 1967-இல் 'சோவியத் லாண்டு' நேரு பரிசு பெற்ற மகாகவி ஜி. சங்கர குருப் பின்வருமாறு விடையளித்தார்:

'படைப்பு எழுத்தாளர்கள் தீவிர அரசியலில் ஈடுபடக்கூடாது; ஆனால், அவர்கள் அரசியலிலிருந்து முற்றிலும் விலகிவிடவும் கூடாது.

'எழுத்தாளன் என்பவன் சமுதாயத்தின் மத்தியில் வாழ்பவன். அவனது சூழ்நிலை அவனைச் சிந்திக்கத் தூண்டுகிறது. அது அவனுக்கு உத்வேகமூட்டுகிறது.'

'வைர மேகங்கள்' என்னும் தமது அண்மைக்காலக் கவிதையை இதற்கு எடுத்துக்காட்டாக அவர் கூறினார். தமது சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்காக அமெரிக்க ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் போராடும் வியத்நாம் மக்களின் வீரத்தைப் போற்றும் கவிதை இது.

"உன் மனமும் அறிவும்
கட்டுண்டு கிடக்கின்றன;
வீரஞ்செறிந்த சிறுநாட்டின் மீது
கொடுமைகள் இழைக்கப்படுகின்றன;
இதைக்கண்டும், காணாததுபோல்
நீ நடிக்கிறாய்!" ——

என்று 'வைர மேகங்களி'ல் அவர் எழுதுகிறார்.

'இந்தக் கவிதை நேரிடை அனுபவத்திலிருந்து எழுதப் பெற்றதல்ல என்று சில விமர்சகர்கள் கூறினர்.' என்றார் சங்கர குருப்.

'அதற்கு என்ன பதில் கூறினீர்கள்?' என்று கேட்டபொழுது அவர் சொன்னார்:

'இத்தகைய விமர்சனத்திற்குப் பதில் ஒன்றும் தேவையில்லை! ஒரு விஷயத்தை நேரிடையாகப் பார்க்காவிட்டாலும், மனக் கண்ணால் பார்க்க முடியும். மனிதகுலம் என்பது ஒன்றே. துன்பமும் வேதனையும் அனைவருக்கும் ஒன்றே. இந்த உண்மையை நாம் பகிர்ந்து கொள்ள முடியும்,' என்றார் சங்கர குருப்.

பாட்ரிஸ் லுமும்பா பற்றிய அவரது கவிதையில் இந்த உண்மையைக் காண்கிறோம். லுமும்பாவின் துயர முடிவுக்கு வருத்துவதோடு, அதில் 'புதிய ஆப்ரிக்காவின் பிறப்'பையும் காண்கிறார், சங்கர குருப்.

'அநீதியால் ஆத்திரம் மூளும்போது கருணையே வெல்கிறது. நாடுகளிடையே சகோதர உணர்வு நிலவ வேண்டும். இதற்கு இடையூறு நேரும்பொழுது, துயரம் உண்டாகிறது. இந்தச் சகோதர உணர்வைச் சீனா மீறி விட்டது. அதிதீவிர தேசியவாதம் அதன் இலட்சியங்களைத் திரித்துவிட்டது' என்றார் சங்கர குருப்.

நாங்கள் பல விஷயங்களைப் பற்றிப்பேசினோம். அப்பொழுது 'சோவியத் லாண்டு' நேரு பரிசுகளைப் பற்றி திரு குருப் கூறினார்.

'அமைதியையும் முற்போக்கையும் இலட்சியமாகக் கொண்ட ஒரு நாட்டிலிருந்து பரிசு பெறுவது ஓர் ஆசிரியனுக்குக் கிடைக்கும் கௌரவமாகும். எனது இலட்சியத்திற்குக்கிடைத்த பரிசாகவே நான் இதைக் கருதுகிறேன், சர்வதேசநல்லிணக்கமும், ஆக்க பூர்வமான சமாதான சகவாழ்வும் இவ்வுலகில் நிலவுவதற்குத் தொண்டாற்ற வேண்டும் என்பதே என் இலட்சியம்.

'சோவியத் யூனியனுடன் நாம் நட்புறவு கொண்டால், மனித குல முற்போக்கைப் பற்றி புதியதொரு கருத்தை உருவாக்கிக் கொள்ளவும், தேசியச் சீரமைப்பை முற்போக்குவழியில் அமைக்கவும் உதவியாக இருக்கும்.'

தனக்குப் பிடித்த ரஷ்யக் கவிஞர்களையும், எழுத்தாளர்களையும் பற்றித் திரு. சங்கர குருப் கூறியதாவது:

'புஷ்கின் எனக்கு மிகவும் பிடித்தமான கவிஞர். உணர்ச்சிகளை வெளியிடுவதிலும், சொற்களைக் கையாளுவதிலும் அவர் ஒரு மன்னன். கவிதை என்பது உணர்ச்சியையும், கற்பனையையும் வெளியிடுவது அல்லவா? புஷ்கின் கவிதையில் நாம் உணர்ச்சியையும், மொழியையும் பகுத்துப் பார்க்க இயலாது. எனவே, புஷ்கின் ஒரு கவிதை மன்னன் என்பதில் ஐயமில்லை.'

லெனினைப் பற்றிய மாயகாவ்ஸ்கியின் கவிதை தமக்குப் பிடித்திருக்கிறது என்றும், 'கலை என்றால் என்ன?' என்ற டால்ஸ்டாயின் நூல் இளமைப் பருவத்தில் தன்னைப் பெரிதும் ஆட்கொண்டது என்றும் திரு. சங்கர குருப் கூறினார்.

மாக்ஸிம் கார்க்கியின் வாழ்க்கை வரலாறு என்னை மிகவும் கவர்ந்தது. இருளிலிருந்து மேன்மேலும் ஒளியை நோக்கிச் செல்லும் ஒரு மனிதனை நான் கண்டேன். அவரது எழுத்துக்களில் முற்போக்குச் சிந்தனைகள் ஒளி வீசுவதைக் கண்டேன். 'உழைப்பே அழகு' என்பது கார்க்கியின் தத்துவம். உழைப்பால்தான் உலகும் வாழ்வும் மிகுந்த அழகு பெறுகின்றன; முக்கியத்துவம் அடைகின்றன,'' என்று திரு. சங்கர குருப் கூறினார்.

சோவியத் இலக்கியம் இந்தியாவில் பரவ வேண்டுமென்றும், இந்திய சோவியத் நட்புறவு நெருக்கமாக வளருவதற்கு அது உதவுமென்றும் அவர் சொன்னார். 'கலாசாரத் தூதுக்குழுக்களின் பரிமாற்றத்தால் இரு நாடுகளிடையே நேச உறவுகள் வலுத்து வருகின்றன. கலாசாரக் குழு அமைப்பில் இங்கு மிகுந்த கவனம் செலுத்தப்படவேண்டும். இங்கு ரஷ்ய மொழியைக் கற்பதற்கும் அதிக ஊக்கம் அளிக்கப்படவேண்டும். இந்தியாவில் ரஷ்யமொழிப் பள்ளிகள் மிகச் சிலவே. கேரளத்தைச் சேர்ந்த ஒருவர் ரஷ்ய மொழிப் பள்ளிகள் மிகச் சிலவே. கேரளத்தைச் சேர்ந்த ஒருவர் ரஷ்ய மொழி கற்கவேண்டுமானால் நெடுந்தொலைவு செல்ல வேண்டியிருக்கிறது. இந்திய நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் இருக்குமாறு ரஷ்யமொழிப் பள்ளிகளை நிறுவுதல் வேண்டும்.

——

# மீன் வளர்ப்புக்குள்ள வாய்ப்புக்கள்

— டாக்டர் வி. ஜி. ஜீவ்ரான்

இந்தியாவில் ஏறத்தாழ 13 இலட்சம் டன் மீன் கிடைக்கிறது. அதில் ஆறு, குளம், குட்டை முதலான நீர்நிலைகளிலிருந்து கிடைப்பது 37 சதவிகிதமாகும். இவற்றிலிருந்து கிடைக்கும் இந்த மிகக் குறைவான அளவை நவீன ரீதிகளில் உயர்த்துவதற்குப் பல வழிகள் இருக்கின்றன.

இனிய நீர்க்குட்டைகளில் வளர்க்கும் மீன்களில் உள்ளூர் ரகம், வெளியூர் ரகம் இரண்டையும் கலக்கவிட்டுத்தோற்றுவித்த மீன் இனங்கள் மீன் வளர்ப்புத் தொழிலுக்கே ஒரு பெரிய அச்சத்தையும், நம்பிக்கையொளியையும் தந்துள்ளன. நல்ல தரமுள்ள மீனினங்கள் இல்லாத குளங்களில் இந்தக் கலப்பின மீன்களை அறிமுகப்படுத்தி வெற்றிகரமாக வளர்க்கலாம். தரமான மீன் இனங்களை உண்டாக்குவதற்கு வங்காளத்தில் அணை அணையாகத் தடுத்து மீன் வளர்க்கும் முறை ஒன்று கடைப்பிடிக்கப்பட்டு வந்தது. இப்பொழுது அதே முறை மத்தியப் பிரதேசத்தின் வடகிழக்குப் பிராந்தியங்களிலுள்ள பல நீர் நிலைகளிலும் பின்பற்றப்பட்டு நடத்தப்பட்டு வருகிறது. இம்முறை இன்னும் பல இடங்களிலும் பரவுமானால் இந்தியாவில் நிலவும் மீன் உணவுப் பற்றாக்குறையை நீக்கிவிட முடியும்.

மீன் குஞ்சுகளை வளர்ப்பதும், இனவிருத்தி செய்வதும் பற்றிச் சமீப காலத்தில் பல பல ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்பட்டன. அவ்வாராய்ச்சிகளின் பயனாக அவற்றை மிக விரைவாக இனவிருத்தி செய்து நல்ல முறையில் வளர்ப்பது குறித்த பல உண்மைகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இன்று நாட்டில் ஏராளமான குளங்குட்டைகள் வெறும் பாசியும், நீர்ச்செடிகளும் வளர்வதற்கிடமாகி வீணாகக் கிடக்கின்றன. எதற்கும் பயனற்ற நீர்ச் செடிகளைத் தண்ணீரில் வளரவிடாமல் கட்டுப்படுத்த இப்போது பல வழிதுறைகள் கண்டறியப்பட்டிருக்கிறது. அம்முறைகளைக் கடைப்பிடித்து வேண்டாத நீர்ச்செடிகளைக் கட்டுப்படுத்திக் குறைத்து வளர்ப்புக்கு ஏற்பாடுகள் செய்யலாம். சதுப்பு நிலங்களையுங்கூடச் சீர்ப்படுத்தி அங்கெல்லாம் மீன் வளர்ப்புப் பண்ணைகளைத் தொடங்கலாம். ஒரிஸ்ஸாவிலும், திரிபுராவிலும் இதுபோலச் செய்யப்பட்டு வருகிறது. விவசாயத்திற்கு உதவும் தண்ணீரிலும் மீன் வளர்ப்பதற்கு வாய்ப்புக்கள் இருக்கின்றன. இப்படிப் பாசன நீரை மீன் வளர்ப்புக்கும், அதே சமயம் வயலுக்கும் உபயோகித்துக் கொள்வதில் இரட்டிப்பு நன்மை இருக்கின்றது.

இந்தியாவில் மீன்பண்ணை வளர்ப்புக்குச் சாதகமாய் உள்ள குளங்குட்டைகளில் மிகச் சிறு பகுதியே இன்று பயன்படுத்திக்கொள்ளப்படுகின்றது. சுமார் 15 இலட்சம் ஏக்கர் நீர்ப்பரப்பு உபயோகப்படுத்திக் கொள்ளப்படாமல் வீணே கிடப்பதாக மதிப்பிடப்பட்டிருக்கிறது. இன்று சுமார் 10 இலட்சம் ஏக்கர் நீர்ப்பரப்பில் இரண்டு இலட்சம் டன் மீன் கிடைப்பதால் வீணே கிடக்கும் சொன்ன 15 இலட்சம் ஏக்கர் நீர்ப்பரப்பையும் நாம் பயன்படுத்தி மீன்பண்ணை தொடங்கிவிட்டால் இன்னும் 3 இலட்சம் டன் மீன் உணவு நமக்குச் சுலபமாகக் கிடைக்கும்.

உப்பு நீருள்ள இடங்களில் மீன் வளர்ப்புக்கு அறிவியல் ரீதியான முறை எதுவும் கடைப்பிடிக்கப்படுவதில்லை. இடங்களுக்கேற்றபடி அனுபவ ரீதியில் கண்டறிப்பட்ட நடைமுறைகளில் அவைகள் வளர்க்கப்படுகின்றன. நம் நாட்டில் உப்புநீர் உள்ள குட்டைகளும், கழிகளும் ஏராளமாக இருக்கின்றன. நல்ல தண்ணீர்க் குளங்களில் விஞ்ஞான ரீதியான மீன் வளர்ப்புப் பண்ணை நடத்துவது போல உப்பு நீர்க் தேக்கங்களிலும் மீன் பண்ணைகள் நடத்தப்பட்டால் மீன் உற்பத்தியை இன்னும் அதிகரிக்கச் செய்ய முடியும்.

நம் நாட்டில் நீர்ப்பாசனத்திற்காக ஐந்தாண்டுத்திட்ட காலங்களில் கட்டப்பட்ட பெரிய பெரிய அணைகள் பல இருக்கின்றன. அந்த அணைகளின் நீர்த்தேக்கங்கள் நம் நாட்டின் நீர்ப்பரப்பை மேலும் அதிகரிக்கச் செய்துள்ளன. இந்த நீர்த்தேக்கங்களிலும் மீன் வளர்த்தலை நவீனமுறைகளில் தொடங்கிப் பெரும் பயன் பெறலாம்.

மீன் வளர்ப்பில் மட்டுமல்லாது மீன் பிடிக்கும் முறைகளிலும் அறிவியல் ரீதியான பல நவீனமுறைகளை இந்தியாவில் புகுத்த வேண்டும். அப்படிப் புகுத்தினால் இப்போது கிடைப்பதைவிட அதிகமாக கண்டுமுதல் கிடைக்கும்.

நம்முடைய தொழிற்சாலைகள் பெருகி வருவதன் காரணமாக ஆறுகள் மற்றும் நீரோட்டங்களில் தொழிற்சாலைக் கழிவுகள் அதிகமாகக் கொண்டு வந்து தள்ளப்படுகின்றன. இப்படிக் கழிவுப்பொருள்கள் தள்ளப்படும் தண்ணீரில் மீன்வளர்ப்பது சிரமம். எனவே நகர்ப்புறக்கழிவுகளையும், தொழிற்சாலைக் கழிவுகளையும், ஆறு, குளம் முதலானவற்றில் தள்ளாதபடி கட்டுப்படுத்தினால்

[ 8-ம் பக்கம் பார்க்க ]









[ 3-ம் பக்கத்தொடர்ச்சி ]

முதல்மகசூல் 47 குவின்டால், இரண்டாம்முறை 37 குவின்டால், மூன்ரும் முறையாக 32 குவின்டாலாக மொத்தம் ஹெக்டேர் ஒன்றுக்கு 116 குவின்டால் மகசூல் கண்டிருக்கிருர்கள். அதிக மகசூல் பெற மூன்ருவது முறை முக்கியப் பயிரின் வரிசைகளுக்கிடையில் வேறு ஏதாவது பயிர் செய்வது.

இம்முறையிலும் நம் விவசாயிகள் உற்சாகமும் நிபுணத்துவமும் காட்டியிருக்கின்றனர். உதாரணமாக, மைசூர்விவசாயியான பொம்மெகௌடா 1963 செப்டம்பர்—அக்டோபரில் கரும்புக்கிடையில் பீன்ஸ் பயிர் செய்து, ஹெக்டேர் ஒன்றுக்கு 2,700 கிலோ பலன் கண்டு ரூ 700 உபரி லாபமும் அடைந்தார். ஆந்திரப் பிரதேசத்துவிவசாயி அஞ்சிரெட்டி வாழைகளுக்கிடையில் பி. 216 எப். பருத்தி விளைந்து ஹெக்டேர் ஒன்றுக்கு ரூ. 4,500 அதிகப்படியான லாபமும் எடுத்தார்.

மத்தியப் பிரதேசத்திலுள்ள போபாலிற்கருகிலிருக்கும் தபோஹ கிராமத்தைச் சேர்ந்த விவசாயி சாயி ஆஷ்ராம்ஷர்மா கோதுமையுடன் உருளைக் கிழங்கு பயிரிட்டார். முதலில் இவர் உருளைக் கிழங்கு நட்டார். பின்னர் கிழங்கிற்கு மண்கட்டிக் கோதுமை விதைத்தார். உருளைக் கிழங்கு அறுவடை செய்தவுடன் கோதுமைக்கு நீர் பாய்ச்சினர். பயிர் நன்ருகச் செழித்து ஏப்ரல் மாதம் அறுவடைக்குத் தயாராகி விட்டது. ஆஷ்ராம் ஷர்மா ஹெக்டேர் ஒன்றுக்கு 450 குவின்டால் உருளைக் கிழங்கும், 40 குவின்டால் கோதுமையும் பயன் கண்டார்.




வெங்காயம், கது, மக்காச் சோளம், காரமணி, கொத்தவரங்காய் இவைகளைக்கரும்பு வயலில் இடைப் பயிராகப் பயிரிடலாம். பரிசோதித்துப் பார்த்ததில் ஒரு துண்டு நிலத்தில் ஹெக்டேர் ஒன்றுக்கு 17 டன் வெங்காயமும், 48 டன் கரும்பும் கிடைத்தன. இதனல் கிடைத்த அதிகப்படியான லாபம் ரூ. 980. கரும்புடன் கது பயிரிட்டத்தில் 12 டன் கதுவுடன் 67 டன் கரும்பும் ஹெக்டேர் ஒன்றுக்கு ரூ. 1,700 அதிக வருமானமும் கிடைத்தது.

இரண்டாவது பரிசோதனைச் சாகுபடியில் 28 டன் தீவன மக்காச் சோளமும் 65·5 டன் கரும்பும் கிடைத்தன. இந்த இடைப்பயிர்ச் சாகுபடியில் அதிகப்படியாக ஹெக்டேர் ஒன்றுக்கு 5,750 டன் மகசூல் கிடைத்தது.

இவ்வழியைப் பின்பற்றி உற்சாகமுள்ள எந்த விவசாயியும் அதிக உணவு உற்பத்தி செய்து, அதிக லாபமும் பெறலாம்.

முன்போலல்லாமல் தற்காலத்தில் பயனுள்ள விவசாயம் செய்ய அனேக வழிமுறைகளிருக்கின்றன. நம் நிபுணர்களும், முன்னேடிகளாகச்சில சகவிவசாயிகளும் லாபகரமான விவசாயத்திற்கு வழிகாட்டியிருக்கின்றனர். மற்றவர்களும் அவர்களைப் பின்பற்றி, குறைந்த மகசூலேயும் சிறிய வரும்படியையும் அதிகமாக்கினல், விவசாயி, நாடு இருவரின் எதிர்காலமுமே செழித்துச் செல்வம் பெருகும்.

## சூரியனின் "எக்ஸ்ரே"

சூரியனின் 'எக்ஸ்ரே' படம் என்றதும், சூரியனுக்கு எலும்புகள் எத்தனை என்று கேட்டுவிடாதீர்கள்.

சூரியனை 'விசேஷ முறையில் எக்ஸ்ரே' படம் பிடிக்கடச்சு நாட்டில் அற்புதமான காமிரா தயாரிக்கப்பட்டிருக்கிறது. சாதாரண மருத்துவ 'எக்ஸ்ரே படம்' போன்றதல்ல, இது. மனிதனின் உடலை ரேடியம் கதிர்கள் ஊடுருவுவதால் உள்ளிருக்கும் எலும்புகள் படத்தில் விழுகின்றன. ஆனல் அம்மாதிரி சூரியனைப் படம் பிடிக்க முடியுமா? சாதாரண கண்ணுடிகளுக்குப் பதிலாக, ஒரு காமிராவில் 'காமிர லென்ஸ்களை' பொருத்தினர்கள் டச்சுக்கார விஞ்ஞானிகள். அமெரிக்க வானவெளி ராக்கட் மூலம் இக்காமிரா வான வெளியில் அனுப்பப்பட்டது. சூரியனின் வெளிச்சமே, ஒளிக் கதிர்களாய்ப் பயன் படுத்தப்பட்டது. ராக்கெட் 120 மைல் உயரத்தில் இருக்கும்போது, சூரியனை இக்காமிரா படம் பிடித்தது. பாரசூட் மூலம் காமிராவும் போட்டோக்களும் பத்திரமாகப் பூமிக்குத் திரும்பி வந்தன.

[ 7-ம் பக்கத்தொடர்ச்சி ]

மீன் வளர்ப்புக்கு நலமாக அமையும்.

மனித ஆரோக்கியத்திற்கு இன்றியமையாத சத்துக்கள் தரக்கூடிய மீன் வளர்ப்புக்கு நம்முடைய ஆறு, குளம், குட்டைகளும், அணைக்கட்டு நீர்த்தேக்கங்களும் அளிக்கின்றன இந்த வாய்ப்பை நன்குபயன்படுத்திமீன் உற்பத்தியைப் பெருக்க இயன்ற முயற்சிகளையெல்லாம் எடுத்துக் கொள்ள வேண்டியது இன்றைய தேவைகளில் ஒன்ருகும்.

### அரியலூர் டி. மு. கோ.

O. S. 756/66. E. P. 658/68

சொரண் அம்மாள் —வாதி.

பழனியாண்டி பிள்ளை – பிரதிவாதி

ஷி நம்பரில் ஜப்தி சொத்துக்களின் ஏல விற்பனைக்காக இஸ்தியாரின் ஷரத்துக்களையும் மதிப்பையும் நிர்ணயிக்க 28-2-68ல் குறிப்பிட்டிருக்கிறது என்பதை இதன் மூலம் அறிவிக்கப்பட்டிருக்கிறது.

N. ஸ்ரீனிவாசய்யங்கார்
1/7700/105 அட்வகேட்.

### திண்டிவனம் டி மு கோ.

S. C. 1008/67

கிருஷ்ணு & Co. பார்ட்னர் ப. து. சுப்ரமணிய செட்டியார் —வாதி

புலிவன்தி தண்டபாணி உடையார் —பிரதிவாதி

பிரதிவாதி வாதியின் கம்பெனியில் பற்றுவரவுசெய்துவந்ததில்பேரேடு கணக்குப்படி ரூ. 265-32க்குதாவா செய்து, 26—2—68-ல் வாய்தா. ஆக்ஷேபணையிருந்தால் ஆஜராகித் தெரிவித்துக் கொள்ளவும்.

P. B. திருவேங்கடாச்சாரியார்
2/7701/106 அட்வகேட்.

### திண்டிவனம் டி. மு. கோ.

S. C. 539/65

செஞ்சிதாலுக்கா புதூர் ரங்கசாமி கவுண்டர் —வாதி

ஷிதாலுக்கா முனுசாமி —பிரதிவாதி

இந்தநம்பரில் வாதி பிரதிவாதிக்கு பாத்யமான ஜப்தி செய்த சொத்துக்களை ஏலத்துக்குக் கொண்டு வருவதால் ஷி ஏலமனுவில் ஏதாகிலும் ஆட்சேபணை இருப்பின் 5—3—68-ல் ஆஜராகி தொவித்துக்கொள்ளவும்.

ஸ்ரீ. D. ராஜகோபாலாச்சாரியார்
4/7703/108 அட்வகேட்.

### திண்டிவனம் டி. மு. கோ.

S. C. 427/60

மேலச்சேரி சிவராமசெட்டியார் —வாதி

மேல்மலையனூர் அமிர்தகண்டேச செட்டியார் —பிரதிவாதி

இந்த நம்பரில் பிரதிவாதியின் ஜப்தி செய்த சொத்துக்களை வாதி வாதி ஏலத்துக்கு கொண்டு வருகிருர். ஷி ஏலமனுவில் ஏதாகிலும் ஆட்சேபணை இருப்பின் 7—3—68ல் ஆஜராகி தெரிவித்துக்கொள்ளவும்.

ஸ்ரீ. D. ராஜகோபாலாச்சாரியார்
4/7704/109 அட்வகேட்.

Edited and Published by its owner Sri. Triloka Sitaram & Printed by him at his Shivaji News Printers, 2-A, Fort Station Road, Tiruchy-2.
Annual Subscription Including 4 special numbers Rs. 10.